# ஞானவிலாஸ காவியம்






தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்**

தஞ்சாவூர்

Thanjavur Sarasvati Mahal Library Series No. 475

।। श्रीः ।।

जगन्नाथकविविरचितम्

# ।। ज्ञानविलासकाव्यम् ।।

ஜகன்னாதகவி இயற்றிய

# ஞானவிலாஸ காவ்யம்

*பதிப்பாசிரியர்*

சாஹித்ய சிரோமணி
திருமதி. எஸ். இராஜலக்ஷ்மி, M. A., B. L. I. S.,
சம்ஸ்க்ருதப் பண்டிதர்,
சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
**சரசுவதி மகால் நூலகம்**
தஞ்சாவூர்

2005

விலை : ரூ. **40-00**






0475
T.M.S.S.M-2016

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | ஞானவிலாஸ காவ்யம் |
| பதிப்பாசிரியர் | : | எஸ். இராஜலக்ஷ்மி |
| வெளியிடுபவர் | : | இயக்குநர்,<br>சரசுவதி மகால் நூலகம் |
| வெளியீட்டு எண் | : | 475 |
| மொழி | : | சமஸ்கிருதம் - தமிழ் |
| பதிப்பு | : | இரண்டாம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | செப்டம்பர், 2005 |
| தாள் | : | TNPL 11.6 kgs. |
| நூல் அளவு | : | 25.5 x 18.5 c. m. |
| பக்கங்கள் | : | 58 |
| படிகள் | : | 250 |
| எழுத்து | : | 16 & 12 |
| அச்சிட்டோர் | : | ஒளியச்சு மற்றும் ஒளியச்சுக்கோப்பு<br>சரசுவதி மகால் நூலகம் |
| புத்தகக்கட்டு | : | மெலிந்த அட்டை |
| பொருள் | : | காவியம் |
| விலை | : | ரூ. 40-00 |

# வெளியீட்டாளர் முகவுரை

ஜகந்நாத கவி எனும் வடமொழிப் புலவர் இயற்றிய ஞானவிலாச காவியம் எனும் சிறுநூல் காகிதச் சுவடியாக சரசுவதி மகால் நூலக வடமொழிப் பிரிவில் இடம்பெற்றுள்ளது. மன்னர்கள் காலச் சுவடியான இச்சிறு காவியம் எட்டு சர்க்கங்கள் கொண்டதாகும்.

உபநிடதங்கள் கூறும் வேதாந்தக் கருத்துக்களை கதை வடிவில் கூறுவதே இதன் தனிச்சிறப்பாகும். சரசுவதி மகால் நூலக வடமொழிப் பண்டிதர் திருமதி. எஸ். இராஜலக்ஷ்மி அவர்கள் தமிழ் முகவுரையுடன் வடமொழியில் அமைந்த மூல காவியத்தைப் பதிப்பித்துத் தந்துள்ளார்கள். வடமொழி இலக்கிய ஆர்வலர்களுக்கும், வேதாந்தம் கற்போர்க்கும் இந்நூல் பயனுடையதாய் அமையும், பதிப்பாசிரியருக்கு என் பாராட்டுக்கள்

இந்நூல் சிறப்பாக வெளிவரத் துணைநின்ற சரசுவதி மகால் நூலக நிருவாக அலுவலர் திரு. இரா. சுப்பிரமணியன், வெளியீட்டு மேலாளர் முனைவர். குடவாயில் பாலசுப்ரமணியன் ஆகியோருக்கும், நூலகப் பதிப்புத்துறை பணியாளர்களுக்கும் என் பாராட்டுக்கள்.

இந்நூலினை அச்சிட நிதி உதவி நல்கிய நடுவண் அரசுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**மா. வீர சண்முக மணி,** இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும்
இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.

தஞ்சாவூர்
20-9-2005

# முகவுரை

பண்டைக் காலத்தில் இன்றைய தஞ்சை, திருச்சி மாவட்டங்களின் நிலப்பரப்பை ஒன்றாக்கிய பகுதியைச் 'சோழதேசம்' என்ற சிறப்புப் பெயரால் அழைப்பதுண்டு. காரணம் சோழர்கள் ஆண்ட நாடு, சுவர்க்க நாடு என்ற பொருள் படைத்ததாயிருந்தது. காவிரி, வெண்ணாறு முதலிய கிளை ஆறுகளாகப் பிரிந்து இப்பிரதேசத்தை வளமாக்கிச் "சோழவளநாடு சோறுடைத்து" என்ற நற்பெயரையும் ஈட்டியது. இதை ஆண்ட சோழ மன்னர்களும், 1535 — 1673 வரை ஆண்ட நாயக்க மன்னர்களும், 1676—1855 வரை ஆண்ட மராட்டிய மன்னர்களும் இந்நாட்டைச் சோறுடைத்ததாகப் பேணியது மட்டுமல்லாமல் பற்பல துறைகளில் பேறு படைத்ததாகவும் ஆக்கினர்.

அன்று இந்நாடு பொன்னியாறு ஓடுவதால் பொன்னிநாடு என்பதுடன் பற்பல துறைகளில் முன்னேற்றமுள்ளதாகவும் இருந்ததால் பொன்னாடு என்றும் போற்றப்பட்டதுண்டு. தமிழ்ப்பண்பு இங்கிருந்துதான் ஆரம்பமாகியது என்றாலும் மிகையாகாது. இவ்வாறு நீர்வளமும், நிலவளமும், கல்வி வளமும் பெற்றுச் சிறந்த நாகரிகமான நாடாகத் திகழ்ந்தது. அறிவுடன் செல்வம் பெருகியது. மக்கள் அமைதியாகவும், அறிவொளியாகவும் வாழ்ந்து பண்பட்ட வாழ்க்கையைப் பெற்றிருந்தனர். இது அமைதிப் பூங்காவாக விளங்கியது என்பதும் பொருந்தும்.

ஆக, இத்தேசம் தாயைப்போல் அன்னமளித்தும், தந்தையைப்போல் அறிவை ஊட்டியும் மக்களை மக்களாகவே வாழச்செய்தது. இதன் புகழ் அக்காலத்திய மாமன்னர்களையே சாரும். இந்தச் சோழதேசத்திற்கு நம் தஞ்சையே தலைநகராக விளங்கியது என்பது நாம் செய்த பாக்கியமாகும். இங்குச் சோழமன்னர்களின் வானளாவிய கலைக் கோவில்களும், நாயக்க மன்னர்களின் மாபெரும் அரண்மனைகளும், மராட்டிய மன்னர்களின் வான் புகழ் நூலகங்களும், அவர்களின் புகழையும், பண்பையும் இன்றும் பறை சாற்றுகின்றன.

அத்தகைய சிறப்பு வாய்ந்த சரஸ்வதி மகால் என்ற நூலகம் பல்லாயிரக் கணக்கான ஓலைச்சுவடிகளாலும், காகிதச்சுவடிகளாலும், அச்சுப்பிரதிகளாலும் நிரப்பப்பட்டு ஒரு கலைக் கடலாக விளங்குகிறது. இங்குப் பற்பல அபூர்வ நூல்களை, எங்கும் வெளியிடப்படாத முதல் நூலாக வெளியிட்டு வருகின்றனர். ஆயினும் இன்னும் வெளியிடப்படாத அபூர்வ நூல்களில்

ஒன்றான ஞானவிலாச காவியம் என்ற மகாகவி ஜகன்னாதனால் இயற்றப்பட்ட ஒரு வடமொழிக் காப்பியத்தை வழக்கம்போல் முதல்முதலாக வெளியிட இந்நூலகம் முன்வருகிறது.

## காப்பிய வரலாறு

பற்பல நூற்றாண்டுகளுக்கு முன்பே நம் நாட்டில் சான்றோர்களால் வெளியிடப்பட்ட வேதம், உபநிடதம், புராணம், இதிஹாசம், காவ்யம் என்று பற்பல துறைகளில் சிறந்து விளங்கிய பற்பல நூல்கள் உள்ளன. அக்காலத்திய மனிதர்கள் இவைகளைப் படித்துத்தான் அறுபத்துநான்கு கலைகளிலும் தேர்ச்சி பெற்றுப் பற்பல நூல்களை எழுதி வைத்தனர். அவை மொழியால் மாறுபட்டிருப்பினும் அதிலுள்ள விஷயங்கள் நாடு முழுவதும் பரவத் தொடங்கின. அவை அந்தந்தப் பிராந்திய மொழிகளில் ஏறிப் பாரதப் பண்பாடு, பாரதக் கலாச்சாரம் என்ற பெயரால் அழைக்கப்பட்டன. ஆங்காங்குச் சிறிது மாறுதல் ஏற்பட்டிருப்பினும் மூலப் பொருள் ஒன்றே என்பதில் ஐயமில்லை. இத்தகைய நூல்கள் எக்காலத்திலும் மனிதர்களைப் படிப்பாளியாகவும் பண்பட்டவர்களாகவும் ஆக்க வல்லன.

பொதுவாக மனிதன் பொருளையும், இன்பத்தையும் அடைய முனைவான் என்பது நம் முன்னோர்களுக்கும் தெரியும். அந்தப் பொருளையும், இன்பத்தையும் எவ்வாறு பெறவேண்டும் என்ற நோக்கில் வேதம் முதல் வள்ளுவம் வரை சான்றோர் கூறிய சித்தாந்தங்கள் அறம், பொருள், இன்பம் வீடு என்பதே இவைகளை வடமொழியில் தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்பர். இந்நான்கையும் புருடார்த்தங்கள் என்பர். புருடார்த்தம் என்றாலே மனிதர்கள் விரும்பும் பொருள்கள். இந்நான்கில் நடுவிலுள்ள பொருள் இன்பம் இவைகளை எல்லோரும் விரும்பினாலும், இவைகளுக்கு முன்னாலும், பின்னாலும் அறம், வீடு இவை கொடுக்கப்பட்டுள்ளன. ஆகவே அறத்தைக் கடைபிடித்து, அதன் மூலம் பொருளையும், இன்பத்தையும் ஈட்டுபவன், வீடு செல்லத் தகுதியுள்ளவனாகிறான் என்பதே அவர்களின் அறிவுரையாகும். மானிடனாகப் பிறந்த ஒவ்வொருவனும் இந்தப் புருடார்த்தங்களை அடைய முற்படுவதே வாழ்க்கையின் குறிக்கோளாகும். இக்குறிக்கோள்களை அடையச் செய்யவே வேதங்கள், புராணங்கள், காப்பியங்கள் பாடுபடுகின்றன என்பது சித்தாந்தமாகும்.

## காப்பியத்தின் சிறப்பு

வேதம் தந்தை, தனயனுக்கு உபதேசிப்பதுபோல் கண்டிப்பான குரலில் மானிடர்களுக்கு, இக் காரியத்தைச் செய், அக் காரியத்தைச் செய்யாதே என்று கூறுகிறது. படித்த பண்புள்ள மானிடர்கள் இந்த உபதேசங்களை அறிந்து, நல் வழியில் சென்று ஷ்டி புருடார்த்தங்களை அடைந்து விடுகின்றனர். இந்த

உபதேசங்களைப் படித்து அவ்வழி நடக்க முடியாத நடுத்தரமானவர்களைக் கடைத்தேற்றப் புராணங்கள் முன் வருகின்றன. ஒரு நண்பன் தன் நண்பனை நல்வழிப்படுத்த, கதைகள் மூலம் பல விஷயங்களைச் சொல்லிப் பாடுபடுவது போல் புராணங்கள் பற்பல கதைகளைச் சொல்லி, இது நேர்வழி அது அதர்ம வழி இவ்வழியே சென்றால் புருடார்த்தங்களை அடைய முடியுமென்று உபதேசிக்கின்றன. இவை மூலம் பலர் திருந்திப் பண்பாளர்களாகத் திகழ முடியும். இவ்விரண்டாலும் திருந்தாத ஏனைய மக்களைத் திருத்தவே கருணையுள்ளம் கொண்ட கவிகள் காவியங்களைப் படைக்கலாயினர். காவியம் மனைவியைப் போன்றது. மனைவி தன் அழகு, நடத்தை இவை மூலம் கணவனைக் கவர்ந்து சொல்லாலும், நயத்தாலும், த்வனியாலும், தன் கணவனை நல் வழிக்குத் திருப்ப முடியும். ஆகவே காப்பியம், வேதபுராணங் களால் திருந்தாத மற்ற எல்லோரையும் நல்வழிப்படுத்துகிறது எனின், அதுவே அதன் சிறப்பாகும்.

## காப்பிய இலக்கணம்

காவியம், தமிழில் இயல், இசை, நாடகம் என்று மூன்றாகப் பிரிக்கப் பட்டிருப்பது போல் வடமொழியில் "சிரவ்ய காவ்யம்" திருச்ய காவ்யம்" என்று இரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளது. சிரவ்யகாவ்யம் பத்யம், கத்யம் சம்பூ என மூன்றாகவும் பிரிக்கப்பட்டுள்ளது. பத்யம் என்பது செய்யுள் வடிவம் கொண்டது. கத்யம் உரைநடையில் எழுதப்பட்ட காவ்யமாகும். சம்பூவில் இரண்டு நடைகளிலும் எழுதப்பட்டிருக்கும். இம்மூன்றும் காதால் கேட்டுப் புரிந்துகொள்ளக்கூடிய நூல்கள் ஆனதால் "ச்ரவ்யம்" எனப் பெயரிட்டனர். "திருச்யம்" என்பது நாடகம், பிரகரணம், பாணம், பிரஹஸனம், டிமம், வியாயோகம், ஸமவாகாரம், வீதி, அங்கம், ஈஹாமிருகம் எனப் பத்து விதமாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இவை அரங்கத்தில் நடிகர் களால் நடிக்கப்பட்டுக் கண்களாலும் காணலாமென்பதால் "திருச்யம்" எனப் பெயரிட்டனர். "ஞான விலாச காவியம்" செய்யுள் நடையில் எழுதப்பட்ட சிரவ்ய காவ்யமாகும். பத்ய காவ்யத்தை நாம் தமிழில் 'இசை' என்று அழைப்போம். பரதர் முதல் வித்யாநாதன் வரையிலுள்ள பற்பல ஆலங்காரி கர்கள் இதற்கு இலக்கணம் வகுத்துள்ளனர். வகுத்தவர்கள் பலராக இருப் பினும் ஒரே குரலில் ஒரே விதமாக, இலக்கணத்தைச் சொல்லியுள்ளனர் என்பது நம் பாக்யமாகும்.

இராமாயணம், மகாபாரதம், புராணங்கள் முதலியவைகளி லிருந்து ஒரு நல்ல கதையைக் கவி தேர்ந்தெடுக்கலாம். அதில் முக்கியமில்லாத விஷயங்களில் ரசத்திற்கு ஏற்றாற் போல் மாறுதல் செய்வதில் சுதந்திரம் உண்டு. நாயகன "நல்லார் ஒருவர் உளரேல்" என்ற வள்ளுவர் வாக்குப்படி சிறந்தவனாக இருக்க வேண்டும். நாயகியும் பெண்குலத்திற்கு ஓர் எடுத்துக்

காட்டாக அமைக்கவேண்டும். சிருங்காரம் அல்லது வீரம் முக்கிய ரசமாக இருக்கலாம். ஏனைய ரசங்களை அங்கமாக விவரிக்கலாம். ஆங்காங்கு இடத்திற்கேற்றபடி சூரிய உதயம், அஸ்தமனம், சந்திரோதயம், பருவங்கள் கடல், மலை, இயற்கை, இவைகளின் வர்ணனையால் காவ்யத்தை மனோரஞ்சக மாக ஆக்க வேண்டும். கதையின் ஓர் அம்சம் முடிய முடிய சர்க்கம் முற்றும் என எழுத வேண்டும். பிரதி சர்க்கம் வேறு வேறு சந்தத்தில் செய்யுள்களை அமைக்க வேண்டும். சர்க்க முடிவில் பல சந்தங்களில் செய்யுட்களை எழுதலாம். இம்மாதிரியாகக் காவ்ய இலக்கணம் வரையப்பட்டுள்ளது.

## கவியின் வரலாறு

"ஞான விலாச காவ்யம்" என்ற இந்தக் காப்பியத்தை இயற்றியவர் மகாகவி ஜகன்னாதன் என்பவர். இவரின் தாய் அக்கா என்று அழைக்கப் பட்டவர். அப்பா நாராயண சோதிடர் என்பவர். இவர் காசியில் வசித்தவர். இவ் விஷயம் இவர் நூலில் இருந்து அறியப்படுகிறது. இதற்குமேல் ஆராய்ச்சியாளர்களும் விவரிக்கவில்லை. ஆயினும் சில விஷயங்களை ஊகயாக ஆராய்ந்து சொல்லலாமெனக் கருதுகிறேன்.

கி. பி. 1676—1855 வரை மராட்டிய மன்னர்கள் நம் தஞ்சையைத் தலைநகரமாகக் கொண்டு சோழ தேசத்தை ஆண்டனர் என்பது யாவருமறிந்ததே. அதில் ஏகோஜி அல்லது வெங்கோஜி என்ற மன்னர் 1676 முதல் 1683 வரை அரசாண்டார் அவருக்குக் 'கங்காதரமகி' என்ற பெரியவர் அமைச்சராகப் பணியாற்றி உள்ளார். இவர் வேதங்களிலும் சாத்திரங் களிலும் கரைகண்டவர். இவர் பாரத்வாஜ கோத்திரத்திலுதித்தவர். இவருக்கு நரசிம்மராயமகி, திரியம்பகராயமகி, பகவந்தராயமகி என்று மும் மணிகள் புதல்வராகப் பிறந்தனர். தந்தை கங்காதரமகி, சிறிது காலத்திற்குப் பிறகு கர்ம மார்க்கத்தில் ஈடுபட்டதன் காரணமாகத் தன் மூத்த மகன் நரசிம்மராயமகியை அமைச்சராக்கி விட்டு ஓய்வு பெற்றார். 1684—1710 வரை ஆண்ட ஷாஜி மன்னனுக்குத் தன் தம்பி திரயம்பகராயமகியை அமைச்சராக்கி விட்டு, நரசிம்மராயமகி ஞானமார்கத்தில் ஈடுபட்டதன் காரணமாக ஓய்வு பெற்றார். அமைச்சரான திரியம்பகராயமகி, ராமபத்ர தீக்ஷிதர், ஸ்ரீதர அய்யாவாள், டுண்டிராஜ வியாசராயமகி போன்ற மாபெரும் புலவர்களுக்கு ஆதரவு தந்து ஏகோஜிபுரம், ஷாஜிபுரம் முதலிய கிராமங்களில் குடி அமர்த் தினார். டுண்டிராஜ வியாசராயமகி காசியில் இருந்து சுவாமிமலையில் குடியேறியவர். பல யாகங்களையும் செய்தவர். முத்ராராக்ஷஸம் என்ற நாடகத்திற்கு உரை எழுதியவர். இவர்தான் 'ஞானவிலாச காவ்யம்' என்ற இந்நூலை அபூர்வமான நூல் என்று 'ஷாஜி' மன்னனுக்கு அளித்ததாக இந் நூலில் எழுதப்பட்டுள்ளது. ஆகவே இந்நூல் 1662க்கு முன்பு எழுதப்பட்டது என்பதில் சந்தேகமில்லை. எங்கள் நூலகத்திலுள்ள பழமையான கவடிகளில்

இதுவும் ஒன்று. இது உபநிஷத்தில் சொல்லப்பட்ட தத்துவத்தையே கதை வடிவம் தாங்கி நமக்கு புகட்டுகிறது. இந்த தத்துவத்திற்கு கதை வடிவம் கொடுத்து நாடகமாக எழுதியவர்கள் பலர்.

உதாரணமாக கிருஷ்ணமிச்ரர், பிரபோதசந்திரோதயம் என்ற நாடகத்தையும் வேதாந்த தேசிகர் சங்கல்ப்ப சூர்யோதயம் என்ற நாடகத்தையும், கனச்யாமன், பிரசண்டராஹூநயம் என்ற நாடகத்தையும், ரத்னகேட சீனிவாச தீக்ஷிதர், பாவனா புருஷோத்தமம் என்ற நாடகத்தையும் சுந்தர தேவர் 'முக்தி பரிணயம்' என்ற நாடகத்தையும் எழுதியுள்ளார்கள். இவர்களுடைய காலம் கி. பி. 12—16 நூற்றாண்டு என்று தீர்மானிக்கப்பட்டுள்ளது. நம் கவி ஜகன்னாதர் அதே தத்துவத்தை காவ்ய வடிவில் எழுதியுள்ளார் என்பது சிறப்பு.

## தத்துவம் என்றால் யாது

பொதுவாக மனிதன் சிந்தனை செய்யும் சக்தி படைத்த ஓர் அறிவு ஜீவி. ஆறறிவு படைத்த அவன் ஒரு நிமிடம் கூட வீணாக உட்கார்ந்திருக்க முடியாது. மிருகங்களைப் போல் உணவு, உறக்கம் மாத்திரம் அவன் வேலையல்ல. ஆகவே அவன் மனம் உலகத்தின்பால் செல்கிறது. நான் யார்? எங்கிருந்தேன், எங்கு செல்வேன், எங்கு சென்றால் பேரின்பம் கிடைக்கும் என்ற சிந்தனை அவன் மனதில் உதயமாவது இயல்பு. அவன் இதற்கு அடிப்படையான ஆதாரங்களைத் தேடுகிறான். நம் முன்னோர்களான முனிவர்கள் என்ன கூறுகின்றனர்? அவைகளில் எது அதிகமாக ஆராய்ந்து கண்டுபிடிக்கப்பட்டது. அதன் ஆதாரங்கள் எதனால் பிரமாணமாகும்? இவ்வாறு ஆராய்ந்து கடைசியில் ஒன்றைத் தீர்மானித்து அவ்வழி செல்வதே சிறந்த வழி என்று தீர்மானிக்கிறான். இவைகளின் முடிவுகளைத்தான் தரிசனங்கள் அல்லது சாத்திரங்கள் என்று கூறலாம்.

தர்சனங்களில் சில உலகத்தின் பொருள்கள், அதாவது பூதங்கள், பௌதிகங்கள், இவைகளை ஆராய்கின்றன. இவைகளைத் தர்க்கம் அல்லது நியாயம் என்போம். சில தரிசனங்கள் வேதங்களில் கூறப்பட்ட பொருள்

களையும் கர்மாக் களையும் அலசுகின்றன. இவைகளை மீமாம்சை என்போம். வேறு சில வேதங்களின் முடிவில் உள்ள உபநிடதங்கள், அதன் அடிப்படையில் வந்த பிரம்ம சூத்திரங்கள், பகவத்கீதை முதலியவைகளை ஆராய்கின்றன. இவைகளை ஆன்மீகத் துறையில் செய்த ஆராய்ச்சி என்றும் வேதாந்தம் என்றும் பகர்வோம். மற்றும் சில தர்சனங்கள் இவைகளையே அடிப்படையாகக்கொண்டு யோகம், சாங்கியம் என்ற வேறுபட்ட மார்க்கங்களை வகுக்கின்றன. இவைகளை சாங்கியம் யோகம் என்றும் கூறுவோம். ஆக இவ்வாறு நியாயம், மீமாம்சை, சாங்கியம், யோகம், பூர்வ மீமாம்சா, உத்தர மீமாங்சா (வேதாந்தம்) என்ற தரிசனங்கள் வெவ்வேறு வகையில் ஆராய்ந்து மனிதனின் சிந்தனா சக்தியைத் தூண்டுவதால் ஆராய்ச்சி நூல்கள் எனக் கூறலாம்.

இவைகளை பற்பல நூற்றாண்டுகளுக்கு முன்பாகவே கௌதமர், ஜைமினி, வியாசர், கபிலர், பதஞ்சலி முதலிய மகான்கள் ஆன்மீகத் துறையில் ஈடுபட்டு தங்கள் தங்கள் கொள்கைகளைத் தக்கச் சான்றுகளுடன் வெளியிட்டுள்ளனர். இதன் மூலம் உலகில் நாகரிகம் என்று ஒன்று தோன்றுவதற்குப் பற்பல நூற்றாண்டுகளுக்கு முன்பே நம் நாகரீகம் எவ்வளவு சிறந்ததாக இருந்தது என்பதை அறிய முடிகிறது. அத்துடன் நம் தர்சனங்கள் வழியால் மாறுபட்டிருப்பினும் ஆன்மீகத் தத்துவத்தை உறுதியாக நிலை நாட்டுவதில் எவ்வளவு முனைப்பாக இருந்தன என்பதும் புலனாகிறது. என்னே நம் முன்னோர்களின் தீர்க்க தரிசனம்! இவைகளை அழியாது பாதுகாப்பது நம் தலையாய கடமை என்பதைச் சொல்லவும் வேண்டுமோ! அப்பேர்ப்பட்ட ஆறு தர்சனங்களில் ஒன்றுதான் உத்திர மீமாம்சை அல்லது வேதாந்தம் என்பது. இது உபநிடதங்களின் சாரத்தை, நம் பாரத கலாசாரத்தின் உயிர் நாடியை விவரிக்கிறது.

மனிதன் 'தான்' என்று நினைக்கும் ஜீவாத்மா 'கடவுள்' என்று கருதும் பரமாத்மா தன் கண்முன் தோன்றும் உலகம். இம்மூன்றிற்கும் உள்ள சம்பந்தத்தை ஆராய்ந்தால் கடவுள்தான் இவ்வுலகமாக மாறியுள்ளான். ஆகவே உலகமே கடவுள். அந்த உலகத்தை உலகமாகப் பார்ப்பது பொய் ஞானம், கடவுளாகப் பார்ப்பதே மெய்ஞானம். கடைசியில் பார்ப்பவனும், பார்க்கப்படும் பொருளும் இரண்டும் ஒன்றே என்ற நிலையில் பேரின்பம் கிடைக்கிறது. அப்பொழுதுதான், ஓர் குலம், ஓர் தேவன் என்ற ஞானம்

உதயமாகிறது. இதை உண்டுபண்ணுவதுதான் உபநிடதங்களின் வேலை. உபநிஷத் என்ற சொல்லிற்கே, ஜீவாத்மாவை பரமாத்மாவிடம் அழைத்துச் செல்வது, ஜீவாத்மாவின் அறியாமையை நீக்குவது, அதனால் பேரின்பத்தை அடைவிப்பது போன்ற பற்பல பொருள்கள் உண்டு.

## நூலாசிரியர் இந்த தத்துவத்தை விளக்கும் விதம்

கட உபநிடதம், இந்த ஜீவனைக் குறிப்பிடும்பொழுது இவ்வாறு சித்தரிக்கிறது. ஜீவன் எஜமானன், அவன் உடல் என்ற தேரில் அமர்ந்திருக்கிறான். புத்தி என்ற தேரோட்டி, கண், காது, மூக்கு, நாக்கு, தோல் என்ற புலன்களாகிய குதிரைகளைப் பூட்டி 'மனம்' என்ற கடிவாளத்தை கையில் பிடித்து, ரூபம், சப்தம், நாற்றம், ருசி, உணர்ச்சி என்ற விஷயங்கள் உள்ள இடங்களுக்கு ஓட்டிச் செல்கிறான். தேரோட்டியான புத்தி, நல்லவனாக இருந்தால் நல் வழியில் ஓட்டிச் சென்று தன் எஜமானனை (ஜீவனை) சுகமாக தன் வீட்டிற்கே செல்லவைப்பான். அவன் கெட்டவனாக இருந்துவிட்டால் கெட்ட வழியில் சென்று தன் எஜமானனை சொந்த வீட்டிற்கு அழைத்துச் செல்லாமல் கண்ட கண்ட இடங்களில் அலையவைப்பான்.

இதிலிருந்து என்ன தெரிகிறது? ஜீவன் என்பவன் சுத்தமானவன், தன் வீட்டிற்கு செல்ல விரும்புகிறான். புத்தி என்பது நல்லதாய், அறிவொளியாய், பண்பட்டதாக இருந்தால் அவன் உதவியால் வீட்டை அடைய முடியும். குதிரைகள் துஷ்டத்தனம் செய்தாலும், அவைகளை அடக்க கடிவாளக் கயிர் நல்லதாக அறுபடாமல் இருக்க வேண்டும். குதிரைகள் நல்லதாய் இருந்தால் அவைகளின் உதவியும் தேவை. மனம் என்ற கயிறு உறுதியாக இருத்தல் வேண்டும். விஷயங்களும் நல்லதாக அமைந்துவிட்டால், இந்த உடல், மனம், புலன், புத்தி மூலமாகவே மனிதன் தன் வீட்டை, கடவுளை அடைய முடியும் என்பது புலனாகிறது.

ஆகவே மனிதன், மனதால், புலன்களை அடக்கி, நல்ல புத்தியிடம் ஒப்படைத்துவிட்டால் அவன் ஞான ரதத்தில் ஜீவனை கடவுளிடம் ஓட்டிச் சென்று விடுகிறான். மனிதன் உலக விஷயங்களில் ஈடுபட்டாலும் நல்லது; கெட்டது எது என்பதைப் புரிந்து கொள்ளவேண்டும். நாம் எதை நல்லது என்று தீர்மானித்தோமோ, அது நிரந்தரமானதா? பேரின்பம் கொடுக்கக் கூடியதா? என்பதையும் அறிந்து கொள்ளவேண்டும். அடக்கம், பொறுமை, சகிப்புத் தன்மை, முதலியவைகளைக் கையாள வேண்டும்.

இவ்வாறு மனதைச் சுத்தமாக்கி புலன்களை அடக்கி இல்லறத்தில் பற்றை விட்டு கடவுளை அடைந்து பேரின்பத்தைப் பெற வேண்டும் என்ற வேட்கையும் வேண்டும். இவ்வாறு இருக்கப் பயிற்சி செய்தோமானால் மனம் தூய்மையடைந்து நல்புத்தி உதயமாகும். இதுதான் ஞானம் எனப்படும்.

இதில் குருவின் ஆசியுடன் கடவுள் அருளும் கிட்டிவிட்டால் மனிதன் கடவுள் தன்மையை அடைந்து பேரின்பம் அடைந்து பிறப்பு இறப்பு அற்ற நிலை அடைகிறான் என்பது இதன் சாரம்.

## இக்கவி தன் நூலில் சொல்லும் கதை

சாரமற்ற இந்த சம்சாரத்தில் "ஸத்விருத்தி" என்று ஓர் நகர் உண்டு. அது பெயருக்கு ஏற்றபடி நல்ல எண்ணங்களைப் படைத்து, அது வைகுண்டத்தைவிடச் சாலச்சிறந்ததாக இருந்தது. அவ்வூர் மக்கள் எவ்வாறு இருப்பார்கள். என்று நீங்களே ஊகித்துக் கொள்ளுங்கள். அந்த நகரத்திற்கு "சத்வ பிரகாசம்" என்று ஓர் அரசன் இருந்தான். அவன் சத்வ குணத்தால் ஏற்படும் அறிவை வளர்ப்பதுடன், ரஜோகுணத்தால் ஏற்படும், காமம், கோபம், பேராசை, மதிமயக்கம், கொழுப்பு, பொறாமை முதலிய பரம விரோதிகளை அழித்தும், தமோ குணத்தால் உண்டாகும் சோம்பல், புத்தி மாந்தியம், தூக்கம் முதலியவைகளை ஜெயித்தும் சிறப்புடன் ஆண்டு வந்தான். அதனால் அவன் அமைதி என்று பெயர் படைத்த "சாந்தி" என்ற பெண்ணை மணந்தான். அவள் பெயருக்கு ஏற்றபடி அடக்கமாகவும், அகங்காரமற்றவளாகவும் இருந்துகொண்டு தன் கணவனுக்கு ஏற்றவளாகவே இருந்து வந்தாள்.

இவர்களுக்கு நாளடைவில் 'நல்லபுத்தி' என்ற பெயருள்ள 'சுமதி' என்று ஓர் பெண் பிறந்தாள். அவள் நல்லவளாகவும், அழகாகவும், தன் பெயருக்கு ஏற்ற நற்காரியங்களைப் புரிபவளாகவும் இருந்தாள். அரசன் சத்வபிரகாசன் "நல்லோர்பழக்கம்" என்ற பெயர் படைத்த ஓர் தாதி மூலம் தன் பெண்ணை வளரவிட்டான். அந்தப் பெண்ணும், நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமாக வளர்ந்து வந்தாள். கன்னிப் பருவம் வந்தவுடன் "விஷ்ணுபக்தி" என்ற தோழியோடு சேர்ந்து அவள் சொல்லும் கதைகளைக் கேட்டும் அதற்கேற்ற பக்தி பூர்வமான விளையாட்டுக்களைச் செய்தும் பருவம் அடைந்தாள். பருவத்திற்கேற்றபடி அவள் உடலில் மாறுதல்கள் தோன்றின. ஒரு நாள் அவள் "சத்யாதமா" என்ற புருடனைப் பார்த்தாள்.

அவன் அழகன். அறிவுற்றவன், அறிவுக் களஞ்சியம், ஆனந்தக் கடலில் மூழ்கியிருப்பவன். ஆகவே அவனை கணவனாக அடையவேண்டும் என்ற எண்ணம் அதாவது காதல் கொண்டாள். அதிலிருந்து காதல் வளர அவனையே நினைக்க ஆரம்பித்தாள்.

தாதிமூலம் இதைக் கேள்வியுற்ற அரசன் சத்வபிரகாசம், சுமதியின் தோழியின் மூலமும் அவள் நிலையை அறிந்து, தன் பெண் காதலிக்கும் மனிதன் எங்கு உள்ளான் எனத்தேடி, அவனுக்கே தன் பெண்ணை கல்யாணம் செய்து கொடுத்துவிடுவது என்று தீர்மானித்தான். தாயான சாந்தியும் ஆமோதித்தாள்.

உடனே அரசன், வேதங்கள், சாஸ்திரங்கள் முதலியவைகளில் கரைகண்ட தன் புரோகிதரை, வரனைத்தேடி வரும்படி அனுப்புகிறான். அவரும் பௌத்தர்கள், ஜைனர்கள், தார்க்கிகர்கள், மீமாம்சகர்கள், சாங்கியர்கள் யோகிகள் இவர்கள் வசிக்கும் ஊர்களுக்குச் சென்று வரனைத் தேடுகிறார். அவர்கள் காண்பிக்கும் வரனிடம் பற்பல குற்றங்கள் இருப்பதைக் கண்டு அந்த புரோகிதர், ஓர் அரசன் மூலம் வேதாந்திகள் இருக்கும் ஊருக்குச் செல்கிறார். அங்கு உபநிடதம் என்ற வீட்டிலுள்ள "சத்யாத்மா" என்ற சுமதியின் காதலனைக் கண்டுபிடிக்கிறார். பிறகு அரசனுக்கு இதைத் தெரிவிக்க அவனும் மிக்க மகிழ்ச்சியுற்று, கல்யாணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து நல்ல நாளில், நல்ல வேளையில் சத்யாத்மா — சுமதி கல்யாணத்தை வெகு ஆடம்பரத்துடன் செய்து முடிக்கிறான். தன்னையும் மிக்க பாக்யசாலியாகக் கருதுகிறான்.

ஆக சுமதி, சத்யாத்மா இருவரும் இணைந்து அழியாத பேரின்பத்தை அனுபவிக்கின்றனர். பிறப்பு, இறப்பு அற்ற நிலையை அடைகின்றனர் என்பதுடன் இக் கதை நிறைவு பெறுகிறது.

இக்கதையின் மூலம் இக்கவி அப்பழுக்கற்ற புத்தியை அடைந்து விட்டால் அதன் உதவியால் ஜீவாத்மாவானவன் பரமாத்மாவின் நிலையடைந்து அத்வைத பாவத்தில் ஆனந்தம் அடைகிறான். அவனுக்கு ஜாதி, மதம், மொழி, நடை உடை பாவனை என்ற பேதங்கள் இல்லை இந்த அரிய பெரிய தத்துவத்தை வெளியிடும் இந்நூலை வெளியிடுவதில் பெருமைப் படுகிறேன்.

## கவியின் வரலாறு

எமது நூலகத்தில் வடமொழிப் பிரிவில் 'ஞான விலாச காவ்யம்' என்னும் நூல் B. 4995, D. 3792 என்ற எண்ணில் பதிவாகியுள்ளது. இந்நூல்

தேவநாகரி எழுத்தில் எழுதப்பட்ட காகிதச்சுவடியாகும். இந்த நூல் ஒரே ஒரு பேப்பர் சுவடிதான் காணப்படுகிறது. வேறு சுவடிகளின்மையால் ஒப்பிட முடியவில்லை. இந்நூல் உபநிஷத்தில் சொல்லப்பட்ட தத்துவத்தை கதை வடிவம் தாங்கி நமக்கு வேதாந்த கருத்தைப் புகட்டுகிறது.

## நன்றியுரை

இந்நூலை வெளியிட அனுமதி அளித்த இந்நூலக இயக்குநரும், தஞ்சை மாவட்ட ஆட்சித் தலைவருமான திரு. தி. சண்முகராஜேஸ்வரன் இ. ஆ. ப. அவர்களுக்கும், இந்நூலக நிருவாக அலுவலர் திரு. அ. பஞ்சநாதன் எம். ஏ., எம். எல். ஐ. எஸ்., அவர்களுக்கும் என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூல் வெளிவர பல உதவிகள் செய்த வடமொழி வல்லுநர்கள் திரு. பு.மா. பத்மநாப சர்மா அவர்களுக்கும், திரு. கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். இந்நூலை நன்முறையில் அச்சிட்டு உதவிய சரஸ்வதி மகால் அச்சக பணியாளர்கள் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

தஞ்சாவூர்
29—5—93

எஸ். இராஜலெக்ஷ்மி,
சம்ஸ்க்ருத பண்டிதர்.

॥ श्रीः ॥

# ॥ ज्ञानविलासकाव्यम् * ॥

॥ श्रीजगन्नाथविरचितम् ॥

---

श्रीगणेशाय नमः । श्रीगुरुभ्यो नमः ।

यस्य स्मृत्या गलन्ति द्रागविद्याविघ्नवृत्तयः ।
तं नित्यानन्दकं ज्योतिर्विनायकमुपास्महे ॥ १ ॥

अस्ति प्रशस्तिविषयः समस्ते क्षितिमण्डले ।
प्रशस्तदुस्तपतपस्सम्पत्त्या सुलभा नृणाम् ॥ २ ॥

वैकुण्ठस्यापि वैकुण्ठपुरीव परमप्रिया ।
कैलासशैलभूमीव सदाशिवविभूषिता ॥ ३ ॥

सत्यभूमिरिव ब्रह्ममुखोत्थश्रुतिपाविता ।
पुरी पुरन्दरस्येव सदारम्भाभिभासिता ॥ ४ ॥

दृढनिश्चयरूपेण प्राकारेणावृताभितः ।
सद्वृत्तिरिति विख्याता नगरी सुगरीयसी ॥ ५ ॥

वाराणसीव या साक्षान्मुक्तिक्षेत्रमनुत्तमम् ।
यदाश्रितानां विज्ञानलाभान्मुक्तिरसंशयम् ॥ ६ ॥

स्वकर्मनिर्मलतमानुष्ठाननिरतैः क्वचित् ।
अधिष्ठिता क्वचिच्छैवैः क्वापि भागवतैरपि ॥ ७ ॥

---

* M. S. D. No. 3792 T. M. S. S. M. Library, Thanjavur.

पायं पायं भगवतो निरपार्य कथामृतम् ।
प्रगायन्तश्च नृत्यन्ति यस्यां सार्द्रहृदो जनाः ॥ ८ ॥

राकानिशीव नो यस्यां तमःस्पर्शोऽपि लेशतः ।
प्रावृषीव न यत्रास्ति रजसोऽपि विजृम्भणम् ॥ ९ ॥

यथा कामादिदोषाणां तत्वविज्ञानिनो मतौ ।
पाषण्डानां प्रवेशोऽपि यत्र जातु न जायते ॥ १० ॥

सन्तोषकोशपूर्णेषु यत्र पौरेषु सर्वदा ।
विभाव्यते कदाचिन्न तृष्णारूपा दरिद्रता ॥ ११ ॥

दृढसद्वासनाभित्तिधृतिकुट्टिममण्डितम् ।
मनःप्रसादविशदस्फुरदङ्गममङ्गलम् ॥ १२ ॥

अन्तर्बहिःशौचरूपमार्जनाभिविलेपतः ।
रजोदोषापनोदेन भृशनैर्मल्यसङ्गतम् ॥ १३ ॥

ईश्वरार्पणरूपाच्च भाटकस्य समर्पणात् ।
अतिसाकल्यवैकल्यचिन्ताव्यतिकरोज्झितम् ॥ १४ ॥

असङ्गेन पराघातसंभूतानर्थवर्जितम् ।
स्वकर्मैव जनो यत्र चित्रधामाधितिष्ठति ॥ १५ ॥

धर्मार्थकाममोक्षाणां गोपुराणामिवोच्चकैः ।
प्राग्दक्षोत्तरपाश्चात्यक्रमाद्यत्र चतुष्टयम् ॥ १६ ॥

विलसन्ति सदा यत्र क्रमेण चतुराश्रमाः ।
रथ्याप्रदेशाश्चत्वारः प्राग्दक्षोत्तरपश्चिमाः ॥ १७ ॥

तत्तदाश्रमधर्माणां पद्धत्यापणवर्तिनाम् ।
पण्यानामिव चित्राणां यत्र संभवति क्रमः ॥ १८ ॥

तत्तदापणसंस्थायि पण्यं यद्यदपेक्षितम् ।
दत्वा मनःस्वं क्रीणाति जनस्तत्तन्निरन्तरम् ॥ १९ ॥

आनीय काम्यकर्माणि कूटपण्यानि भूरिशः ।
दर्शयित्वा लोभयतो गुणवर्णनपूर्वकम् ॥ २० ॥

यत्र रथ्याप्रदेशेषु प्रपन्नान् कर्मठान् शठान् ।
विलोकते न दृष्ट्यापि नित्यमात्मग्रहो जनः ॥ २१ ॥

वैराणां पिशुनानां वा परस्त्रीगामिनामपि ।
प्रवेशो मधुपानां वा यत्र नास्ति कदाचन ॥ २२ ॥

महागमाश्रितामोदमधुरैः सुमनोगणैः ।
भ्रमराणां गतिं नित्यं वहद्भिरनुसेवितम् ॥ २३ ॥

सूक्तिभिः सुद्विजानां च हृद्यं मृदुलतास्पदम् ।
यत्रेश्वरार्थानुष्ठानवृन्दमुद्यानमण्डलम् ॥ २४ ॥

सूक्त्या परमहंसानां हृद्या अकमलोज्झिता ।
हरन्ति सत्कथा एव यस्यां सरसि कामनः ॥ २५ ॥

पवित्रचित्रचारित्रचारुवीचिचयाञ्चिता ।
नानागुणगणव्याजकञ्जराजिविराजिता ॥ २६ ॥

कान्ताभिः पौरलोकस्य नित्यं कुशलबुद्धिभिः ।
वगाह्यमाना चान्योन्यं रसासेचनपूर्वकम् ॥ २७ ॥

भ्रियमाणरसाजस्रं जनश्रोत्रपुटैर्घटैः ।
शीतलार्द्ररजोरूपपङ्कसङ्करनाशिनी ॥ २८ ॥

नानाद्विजकलाकान्तैः सुमनोरुचिधारिभिः ।
महागमैः श्रिता नूनमनुकूलप्रवृत्तिभिः ॥ २९ ॥

उत्पन्ना सगुणब्रह्ममहातीर्थरसाशयात् ।
मुखैरनेकैर्मिलिता परानन्दपयोधिना ॥ ३० ॥

महापातकसन्दोहतुङ्गपर्वतभेदिनी ।
नानापुण्यकथारूपनदीभिः कृतसङ्गमा ॥ ३१ ॥

सुधारसादपि परं वहन्ती मधुरं रसम् ।
अक्षय्या भगवत्कीर्तिर्यत्रास्ति हि तरङ्गिणी ॥ ३२ ॥

अहो यत्रावगाढानां पूतानां देहिनां परम् ।
स्वर्गोऽपि पदविन्यासयोग्यो नान्यस्य का कथा ॥ ३३ ॥

अधस्तात्पतितां विष्णोः पदाद्विष्णुपदीमपि ।
स्वमहिम्ना हसति या सदा विष्णुपदोन्मुखी ॥ ३४ ॥

श्रवणे रोचमानायां देवस्य कमलापतेः ।
कथमन्ये तु नन्वेषा गङ्गा तत्पदसङ्गिनी ॥ ३५ ॥

अमरीभिर्विकृष्यन्ते जना गङ्गानिमज्जिनः ।
मुक्तिरेका वरारोहा यत्स्नातान् स्प्रष्टुमर्हति ॥ ३६ ॥

यत्प्रवाहे निपतिता विशीर्णतनुबन्धनाः ।
चिन्मात्रशेषिणो यान्ति तरसानन्दसागरम् ॥ ३७ ॥

नाधोगतिं कलयते न धत्ते पङ्कसङ्करम् ।
सभङ्गतां न भजते याऽपूर्वैव तरङ्गिणी ॥ ३८ ॥

सहसान्यनदीमग्नाः अधो यान्ति विचेतनाः ।
यत्र मग्नास्तु गच्छन्ति चिन्मयाः पदमुत्तमम् ॥ ३९ ॥

क्षालयन्ति किल स्नानादन्यनद्यो बहिर्मलम् ।
आभ्यन्तररजोदोषमार्जने या परं क्षमा ॥ ४० ॥

पातिव्रत्यानुवृत्त्येव परमानन्दवारिधेः ।
क्षीणभावस्य या गन्धं स न स्पृशति जातुचित् ॥ ४१ ॥

रजसा यान्ति मालिन्यमन्यनद्यश्चिरेण चेत् ।
प्रसभात्तद्वहन्त्येव पङ्कसङ्करमान्तरम् ॥ ४२ ॥

कलयापि किल स्प्रष्टुं यां सदैव सुनिर्मलाम् ।
सह तेन रजस्तावत् क्व पुनः पङ्कसङ्करः ॥ ४३ ॥

युक्त्या यथोक्तिरमला कुशला च बुद्धिः
भक्त्या हरेः शुचिविवेककला विरक्त्या ।
श्रीचन्द्रचूडनगरीव सुपर्वनद्या
ह्याप्यभासत तथा सुतरां पुरी सा ॥ ४४ ॥

अक्का जगन्नाथमसूत माता
पिता च नारायणदैवविद्यम् ।
तन्निर्मिते ज्ञानविलासनाम्नि
काव्येऽत्र सर्गः प्रथमो व्यरंसीत् ॥ ४५ ॥



## द्वितीयः सर्गः

सम्पन्नो राज्यसम्पत्त्या दैवसम्पत्स्वरूपया ।
राजा सत्वप्रकाशाख्यो नगरीं तामपालयत् ॥ १ ॥

रिपू रजस्तमोरूपौ परिभूयात्मतेजसा ।
दैत्यसम्पद्बलं हत्वा तत्रानन्दमविन्दत ॥ २ ॥

सदा निवृत्तिरूपायां सभायां तस्य भूपतेः ।
जनकस्यैव सच्छास्त्रविचारः समपद्यत ॥ ३ ॥

शमयुक्तान् समदृशः परं निर्वाणमीयुषः ।
अभिगम्य स्वयं राजा साधु साधूनपूपुजत् ॥ ४ ॥

अन्तकालेपि पुरुषाः क्षणं यदनुषेवणात् ।
सद्यः प्रयाता देवत्वं साक्षादन्यत्किमुच्यते ॥ ५ ॥

येन सद्भूमिपालेन सेवका दैवकान्तयः ।
प्रापिता घनसन्तोषद्रव्यदानेन सम्पदम् ॥ ६ ॥

यं सदा सेवमानानां पुम्सां सद्भूमिनायकम् ।
आनन्दनिष्यन्दमया व्यगलन् किल वासराः ॥ ७ ॥

J-

देवोऽपि कमलाकेलिकलाकौतुकलम्पटः ।
यदाश्रितेषु लोकेषु परमां प्रीतिमावहत् ॥ ८ ॥

यस्य सद्भूमिनाथस्य न यत्रासीदनुग्रहः ।
स्पर्शः सुखलवस्यापि तस्य नैवोपपद्यते ॥ ९ ॥

आयुःसत्वबलारोग्यवर्धनं मधुरं शुचि ।
सुस्निग्धं सुरसं भोज्यमभुञ्जत यदाश्रिताः ॥ १० ॥

अकामबन्धं विधिवन्निर्दम्भं भूरिदक्षिणम् ।
सदन्नं श्रद्धया युक्तं अयजन्त सुबुद्धयः ॥ ११ ॥

शरीरवाङ्मनःसाध्यं तपो निर्दम्भकामनम् ।
सदन्नं श्रद्धयोपेतं शान्तं सुकृतयोऽतपन् ॥ १२ ॥

कामनोपक्रियाकूतहीनं पूतं यथाविधि ।
देशकालाद्यनुगतमददुः श्रद्धयान्वितम् ॥ १३ ॥

नागरा नन्द्यमानास्ते तेन धर्मैकमूर्तिना ।
अयोध्यां रामचन्द्रेण पाल्यमानां समस्मरन् ॥ १४ ॥

मन्दाकिनीव जलधेः यामिनीव कलानिधेः ।
शान्तिरित्याख्यया ख्याता तस्यासीत्प्रियकामिनी ॥ १५ ॥

सा तेन सङ्गमं प्राप्ता चन्द्रेणेव कुमुद्वती ।
दृष्टिप्रीतिमिवासूत सुमतिं नाम कन्यकाम् ॥ १६ ॥

श्लाघ्येन जन्मना तस्या दम्पती प्रीतिसम्पदम् ।
प्राप्नुतां परमां गौर्या यथा मेनाहिमाचलौ ॥ १७ ॥

अथ प्रसूतां सुभगां नयनानन्दचन्द्रिकाम् ।
साधुसङ्गतिरूपा तां धात्री सम्यगपालयत् ॥ १८ ॥

सा साक्षात्साधुसङ्गत्या पाल्यमाना दिने दिने ।
पुपोष पोषकं पित्रोर्वीतदोषकलं वपुः ॥ १९ ॥

बालग्रहाश्च कामाद्याः प्रबला अपि निर्भरम् ।
द्रष्टुमप्यैशत न तां साधुसङ्गतिपालिताम् ॥ २० ॥

स्नेहबन्धं परं तस्यां दृष्ट्वा तौ साधुसङ्गतेः ।
दम्पती सुखमासातां निश्चिन्तौ तत्प्रपालने ॥ २१ ॥

सापि धात्र्यां परिचयाद्वृद्धासक्तिः सुमङ्गला ।
न स्थातुमशकद्बाला क्षणमप्येतया विना ॥ २२ ॥

अथ सा बालतां किञ्चिदतीता नाप्तयौवना ।
अक्रीडत् भगवद्भक्त्या सख्या धात्र्युपनीतया ॥ २३ ॥

प्रतिमामेव देवस्य कृत्वा पाञ्चालिकां हरेः ।
तत्र बद्धादरामेनां हरिभक्तिरखेलयत् ॥ २४ ॥

विधाय हरिपूजादिव्यापारानेव खेलनात् ।
अन्यव्यापारविधुरां हरिभक्तिररीरमत् ॥ २५ ॥

भगवत्केलिसन्दर्भगीतकान्यन्वशिक्षयत् ।
अश्रावयच्च भगवत्कथामेव कथानकम् ॥ २६ ॥

मनोरमरमाराधामचत्वरभूमिषु ।
स्वस्तिकादिविनिर्माणवैदग्धीमप्यशिक्षयत् ॥ २७ ॥

एवमेते मिथः प्रेमलाक्षासङ्घटिते इव ।
विना भूयः क्षणमपि स्थातुं ते समशक्नुताम् ॥ २८ ॥

स च तयोः सहवासमहोत्सवः
समभवत्सुतया हृदयङ्गमः ।
अपनिमीलनचम्पककोरके
लसितकान्तिसुवासनयोरिव ॥ २९ ॥

अक्का जगन्नाथमसूत माता
पिता च नारायणदैवविख्म् ।
तन्निर्मिते ज्ञानविलासनाम्नि
काव्येऽत्र सर्गो व्यगलद् द्वितीयः ॥ ३० ॥

## तृतीयः सर्गः

विशीर्णशैशवामेनां यौवनश्रीरथाश्लिषत् ।
मधुलक्ष्मीरिवापेतशिशिरां वनमण्डलीम् ॥ १ ॥

नित्यानित्यार्थविषये तथेहामुत्रभोगयोः ।
विवेकश्च विरागश्च स्तनयोरुदभूद्द्वयम् ॥ २ ॥

उद्भिन्नशैवलाभासस्तनान्तरविलम्बिनी ।
शमादिषट्कसम्पत्तिस्तस्या रोमालिरुन्नता ॥ ३ ॥

लीलागतिरभूत्तस्या धुन्वती बालचापलम् ।
मत्या परमहंसानां स्पर्द्धमानमुमुक्षता ॥ ४ ॥

एवं सा प्राप्ततारुण्या पुण्यलावण्यसम्भृता ।
न कस्य हृदये सद्यः प्रद्युम्नोल्लासमातनोत् ॥ ५ ॥

अन्तर्वहन्ती प्रद्युम्नविलासमुदयोन्मुखम् ।
त्यक्त्वा बहिर्भ्रमं सख्या सहैकान्तमसेवत ॥ ६ ॥

निराहारतया तस्यै सूक्ष्मायै नैव किञ्चन ।
आक्रान्तायै प्रियप्राप्तिचिन्तया समरोचत ॥ ७ ॥

नित्योऽपि तस्या व्यापारो गलितोऽभवदन्वहम् ।
समकल्पयदेकान्तमासाद्यान्तरितं मुहुः ॥ ८ ॥

आनन्दनिष्यन्दमयं निःशेषगलितद्वयम् ।
सुखं शंसन्ति सुदृशः प्रियालिङ्गनसम्भवम् ॥ ९ ॥

तथाहमप्यहो लब्ध्वाऽनुरूपरमणं तदा ।
परमानन्दमाप्स्यामि तदाश्लेषणसम्भवम् ॥ १० ॥

सुदृशाः प्रिययोगिन्यो हन्त दृष्ट्वा हसंति माम् ।
प्रेयःपुरुषसंयोगरसास्वादपराङ्मुखीम् ॥ ११ ॥

प्रमत्तकोकिलाकेलिकलाकलकलः किल ।
अप्राप्तप्रिययोगायै मह्यं न ह्यनुरोचते ॥ १२ ॥

प्रफुल्लमल्लिकामोदमधुसम्भेदसुन्दराः ।
हन्त मां नहि धिन्वन्ति मन्दमलयवायवः ॥ १३ ॥

चञ्चत्काञ्चनसम्भेदविस्फुरन्मणिकल्पितम् ।
जानामि दूषणप्रायं मनोज्ञमपि भूषणम् ॥ १४ ॥

द्राक्षामाक्षिकचूतेक्षुरसस्य तु वृथा कथा ।
सुधापि विबुधाहार्या विदधाति न मे रुचिम् ॥ १५ ॥

कस्तूरीचन्द्रसम्भेदहृद्यचन्दनलेपनम् ।
मल्लिकामालतीमाला अपि मे न मुदावहाः ॥ १६ ॥

नवरसाललसत्कलिकावली
कनकक्केलिमिलत्कलकोकिलः ।
बकुलसालदलन्मुकुलऽछटा-
कलकलाकुलितालिकुलाकुलः ॥ १७ ॥

विदलवञ्जुलमञ्जुलमञ्जरी-
पटलमञ्जिमरञ्जितकाननः ।
वितनुते मलयानिलपेशलो
मम रसं न वसंतऋतुः किल ॥ १८ ॥

सघनसारपटीरविलेपनै-
रहनि भव्यतमव्यजनानिलैः ।

निशि तुषारमरीचिकरोत्कर-
व्यतिकरेण हृतोष्मभरव्यथः ॥ १९ ॥

विचिकिलावलिकोमलमल्लिका-
परिमलाकलितातुलकौतुकः ।
अपि निदाघऋतुर्विदधाति मे
सुखकलामपि नैव कथञ्चन ॥ २० ॥

मधुपकेलिनिकेतनकेतकी-
कुसुमसौरभसारमनोहरः ।
घननिदाघसमुन्मदमेदुरो-
न्नतकलापकलापिकुलाकुलः ॥ २१ ॥

दलदमन्दमरन्दककन्दली-
प्रसवनीपवनीकमनीयरुक् ।
न वितनोति विनोदनमुन्मदो
मम मनागपि नाम घनागमः ॥ २२ ॥

शुचिपयःसरसीसरसीरुह-
द्युतिविलासरसीकृतमानसा ।
निशि शशाङ्ककरामृतसम्भृतां-
बरसरःस्फुटतारककैरवा ॥ २३ ॥

अपनिमीलनकोमलमालती-
कुसुमसंवलितालिकुलाकुला ।
मम मरालकलाकलितान्तरा-
शरदपि प्रमदाय न जायते ॥ २४ ॥

अतनुकेलिकलाकलनोचिते
समुचितैश्चिरमन्तरधामनि ।
अभिगतैः परमं सुदृशां गणैः
स्वहृदयङ्गमसङ्गममङ्गलम् ॥ २५ ॥

अकलितोल्बणजाड्यनिपीडनः
प्रियवियोगवियोजितसम्मदः ।
बत मनागपि नाम सुखागमं
मम समातनुते न हिमागमः ॥ २६ ॥

भसलवन्दिकुलैः कलकैतवा-
त्समुपनीतमिवातिमनोहरम् ।
विदलकुन्दलतामुकुलच्छला-
द्यश इव स्वमनल्पतरं विसन् ॥ २७ ॥

युवतिभिः पतिसङ्गमयापित
प्रचुरजाड्यसमीरणपीडनः ।
प्रियवियोगजुषो मम हा पुनः
न शिशिरोऽपि सुखाय स जायते ॥ २८ ॥

विचित्रचित्ररचनाचारुकाञ्चनभित्तिभिः ।
अनेकरूपधूपश्रीसौरभोद्गारधारिभिः ॥ २९ ॥

चन्द्रकान्ताङ्गणोद्भूतचन्द्रमण्डलमण्डितैः ।
अप्राप्तप्रियसङ्गा किं करवाणि गृहैरपि ॥ ३० ॥

प्रफुल्लमल्लीसंश्लिष्टकुसुमद्रुमपालिषु ।
कोकिलालिकुलोद्भिन्नकाकलीकेलिशालिषु ॥ ३१ ॥

अप्रियायाः प्रियाश्लेषरसास्वादे महोत्सवम् ।
आरामेष्वपि चारामः समुदेति मनाङ् न मे ॥ ३२ ॥

जानामि परमं धाम प्रियः पुरुष एव तत् ।
स एव च महारामः कामं विश्रामदायकः ॥ ३३ ॥

तस्मादभीष्टपुरुषस्य न यावदाप्तिः
स्यान्मे सुखस्य न लवोप्युदयेत तावत् ।

चिन्तातुरामिति नितान्तमिमामुदीक्ष्य
धात्री न्यवेदयत सा किल भूमिपाय ॥ ३४ ॥

अक्का जगन्नाथमसूत माता
पिता च नारायणदैवविद्यम् ।
तन्निर्मिते ज्ञानविलासनाम्नि
काव्येऽत्र सर्गो व्यगलत्तृतीयः ॥ ३५ ॥

---

## ॥ चतुर्थः सर्गः ॥

अथ विज्ञाततत्वोऽसौ भूपतिः समुपेत्य ताम् ।
आश्वासयन् समवदत् पुत्रि चिन्तां परित्यज ॥ १ ॥

यादृशः पतिरिष्टस्ते वर्त्तते साधुलोचने ।
निवेदय तमन्विष्य विधास्ये ते मनोरथम् ॥ २ ॥

इत्युक्ता सा नतमुखी सखीं दृग्लीलयैक्षत ।
सापि तत्सर्वमर्मज्ञा राजानं समभाषत ॥ ३ ॥

आख्यातुं स्वमुखेनैव राजन् जिह्रेति बालिका ।
आख्याति मन्मुखेनैव तदेतदवधार्यताम् ॥ ४ ॥

केवलं परमानन्दस्वरूपमपविक्रियम् ।
कालत्रयेऽपि निर्बाधमस्थूलमकृशं तथा ॥ ५ ॥

अनेकदेशविख्यातमखण्डज्ञानसम्भृतम् ।
गुणानामथ सर्वेषां प्रकाशनपरायणम् ॥ ६ ॥

कलयापि न दोषस्य परिस्पृष्टं कदाचन ।
प्रभवं सर्वशक्तीनां स्वप्रकाशमनुत्तमम् ॥ ७ ॥

